# வள்ளுவ மும்மணி மாலை



சந்த வசந்தம்


கவிப் பெருஞ்சுடர் அநந்த நாராயணன்

கவிவேழம் இலந்தை சு இராமசாமி

கவிப்பெருஞ்சுடர் ஹரி கிருஷ்ணன்

அனந்த்,  இலந்தை, ஹரிகிருஷ்ணன் ஆகியோர் இணைந்து இயற்றிய
வள்ளுவ மும்மணி மாலை.
அனந்த் அறம்-வெண்பா
இலந்தை- பொருள்- கட்டளைக்கலித்துறை
ஹரிகிருஷ்ணன்  - இன்பம்- விருத்தம்

வள்ளுவ மும்மணிமாலை

காப்பு

தெள்ளு தமிழில் சிறப்புறவே, ஐங்கரனே

வள்ளுவ மும்மணி மாலை யிதை-அள்ளும்

அனந்தன் இலந்தை அரிகிருஷ்ணன் சேர்ந்தே

புனைந்திட நீயே புகல்.

நூல்

வெண்பா

உலகுளோர் வாழ உயர்நெறிகள் தம்மைப்

பலவாய்ப் பகுத்த புலவன் - தலைமையாய்

வைத்தான் அறத்தினைநம் வாழ்வில் அதுவொன்றே

பொய்த்திடா உண்மைப் பொருள் 1

கட்டளைக் கலித்துறை

பொருளைப் பெறநற் பொருளைப் புகன்ற புதுமையிலே

தெருளைக் கொடுத்த திருவள் ளுவனே, தெளிவிலதாம்

இருளைக் கிழித்தே இகபர வாழ்வில் இதமளித்தாய்

அருளை, பொருளை அதற்கும் இதற்கும் அளித்தவனே! 2

விருத்தம்

அளிக்கும் போதே பெறுவதெது?

அன்பிற் புயலாய்ப் பூப்பதெது?

வெளியில் தோன்றும்; உள்ளுக்குள்

வெளிச்சம் போடும்; உயிர்ச்சுனைதான்

முளைக்கும் தளிர்க்கும் மோகமது

முன்னர் இரண்டின் மூலமது

திளைத்துத் தெளிவோர் சிலரென்றே

திருக்கு றள்சொல் காமமது. 3

வெண்பா

அதுபெரி தென்பார் அறங்களில் என்றும்

பொதுநெறியாய்ப் பொய்யாமை பேணி - எதுவரினும்

கொல்லாமை நோற்கும் குணத்தை உடையோருக்(கு)

இல்லாத(து) ஏதொன்றும் இல். 4

கட்டளைக் கலித்துறை

இல்லென்றால் தேவை இணைந்த சுகவாழ்க்கை, ஏற்றவழி

சொல்லென்றால் தேவை தொடர்ந்த பொருட்செல்வம், சொன்னபடி

நில்லென்றால் தேவை நெறிசேர் வினைத்திட்பம், நேர்ந்தபடி

வெல்லென்றால் தேவை , விளக்கும் குறள்போல வேறெதுவே! 5

விருத்தம்

வேறெவளோ உம்நெஞ்சில் வித்திட்டுக் கிடக்கின்றாள்

மெய்த்தும்மல் மறைத்தீர்நீர் வெட்கமிலாப் பரத்தரென்று

மாறிடுவாள் பேதலிப்பாள் வாய்ஜாலம் எனநினைத்தால்

மலர்களினால் அம்புசெய்து மனத்தினிலே நாற்றிடுவாள்

சீறிவரும் போரானை சீவிவரும் தோள்களையும்

திடுக்குறவே செய்திடுவாள் திகைப்படைந்து நிற்கையிலே

மாறிடுவாள் நெஞ்சுக்குள் மையலெனும் பயிர்வளர்ப்பாள்

மங்கையிவள் குளிர்நெருப்பில் வாழ்வுநெறி கூடுவதே. 6

வெண்பா
கூடி மகிழ்ந்தின்சொல் கூறி வறியோரை

நாடி விருந்தோம்பும் நல்வாழ்வைப் - பாடிநூல்

முன்வைத்தான் மூதறிஞன்; இல்லறத்தின் மேலெதுவும்

இன்மையைச் சுட்டும் இது. 7

கட்டளைக் கலித்துறை

இதனை இதனால் இவன்முடிப் பானென எண்ணியெண்ணி

அதனை விடுக அவன்கண் எனவே அளித்தகுறட்(கு)

எதனை இணையாய் இயம்பிட வள்ளுவன் என்கிறவற்

புதனை, மறைசொல் புனிதனைப் போற்றிப் புகலுவமே! 8

விருத்தம்

புகலென்றேன். பொக்கென்று வாய்மூடிக் கண்சிரித்துப்

புன்னகைப்பூ பூத்தென்ன புதுசென்றாள். இல்லையில்லை

புகலென்றேன். உள்ளத்தில் நானிருக்க இன்னொன்று

புகலென்று நானன்றோ புகல்வதென்றாள். என்னவளை

மிகநெருங்கிக் கரம்பற்றிக் கண்ணுக்குள் கண்பார்த்து

விளையாட்டா நீயென்னை அறியாயா நானுன்றன்

புகலென்றேன். அறியேனா பொய்களென்றுக் கைதள்ளிப்

புன்னகையால் அணைப்பவளால் வாழ்வெல்லாம் அமுதமம்மா!

வெண்பா

மாதவத்தோர் மெய்யை வருத்தித்தாம் பெற்றநல

ஏதவத்தை யில்லாமல் எல்லோரும் - சாதிக்க

அன்றுகுறள் தந்த அறவழியாம் அன்புவழி

வென்றிடலாம் அஃதால் வினை 10

கட்டளைக் கலித்துறை

வினையை வினையால் விதந்து முடிக்கும் விவரமுடன்

முனையும் முனமே முறையுடன் ஆய்ந்து முடிவெடுத்தே

இனியும் சமயம் எதிர்பார்த் திடாமல் எடுத்தபடி

நினைவே அதுவாய் நிறைவேற் றிடவரும் நிம்மதியே! 11

விருத்தம்

மதியே சிலிர்த்து வனமாய்க் கிளைத்து மதமாய்த் துவைத்து மனமெல்லாம்

மதுவாய் இனித்து மொழியால் நனைத்து விழியே பனித்தொ ருறவாகி

இதுவோ களித்தல் இதுவோ திளைத்தல் இதுவோ உயிர்த்தல் இதுவோதான்

இதயம் நெகிழ்த்து மதுவில் நனைத்தென் இளமை முகிழ்க்கும் பொருளாகி

நுதலிற் பதிக்கும் இதழிற் திதிக்கும் நுரைகொப் புளிக்கும் புனலாடி

நொடியிற் கனிந்து மடியிற் கனன்னு நுணுகிக் கலந்து வாழ்வெல்லாம்

பதியும் படிக்கென் றறியும் கணத்தில் வெளியா கிநிற்கும் அறியாமை

பனியாகி நிற்கும் இவளோ டெனக்குப் பரிவிற் சிலிர்த்த முயக்கந்தான்! 12

வெண்பா

தானம் புரிதல் தயைகாட்டல் தன்குடும்ப

மானம் மதிக்கும் வகைநடத்தல் - வானிடிந்து

வீழினும் தம்வாழ்வில் மெய்மை இவைகாப்போர்

தாழினும் மேலோரே தாம் . 13

கட்டளைக் கலித்துறை

தாமாக வேயேதும் சாரா, உளத்தில் தளர்விலதாய்

ஆமாறு நோக்கி, அதன்பின் பயன்நோக்கி, ஆய்ந்தறிந்த

ஏமாப் புடையார் இடம்சென் றறிவுறை ஏற்றபடி

நாமாறி டாமல் நலியா வினைசெயல் நல்லதுவே! 14

விருத்தம்

நல்லன தரும்நற் தாயாவாள்

நடுவே சிலநாள் மகளாவாள்

சில்லெனப் பனியாய்ப் பொழிந்துகொண்டே

தீயாய்ச் சூழும் துணையாவாள்

இல்லம் செழிக்க மனையெல்லாம்

இன்பம் விளைக்கும் தேவியவள்

வெல்வது தோற்கும் போதென்னும்

விந்தை சொன்ன முதலாசான்.15

வெண்பா

ஆசு மலிந்த அறிவோ(டு) அவைநடுவில்

பேசத் துணிவுகொள் பேதையர்கள் - தூசினும்கீழ்

நெற்பதர்க்(கு) நேராவர், நீர்மையிதே நல்வழியைச்

சொற்படுத்தித் தந்தோன் துணிபு.
16

கட்டளைக் கலித்துறை

துணிவுடை யானை, சொலல்அறி வானை, தொடர்ந்திடும்நற்
பணிவுடை யானை, பயனறி வானை, பகர்ந்திடுஞ்சொல்
அணியுடை யானை, அகமுணர் வானை,அடுப்பதெதிர்
திணிவுடை யானை, சிறப்புடன் சேரும் திருவருளே! 17

விருத்தம்

திருவருக, எனதுமனம் உருகவரும் உருவுடைய
செவ்விதழ்ச் செல்வி வருக.
சிவைவருக, உமைவருக, கமலமிசை அமருகிற
தேவியே வருக வருக,
முருகனென எனையுயர முடிபுனைய அருகமரும்
மோகனச் சிலையு மாகி
முகமொளிர அழகுநகை பெருகவரு மருவினிய
மூர்த்தமாய் இல்லம் வருக,
கருவதனில் எனதுமக வளர வரு பெரியதிரு-----------------?
கடலான கண்ணி வருக,
கரமதனில் உனதுகரம் கருவிழியில் உனதுவிழி

காதலீ வருக வருக,
பெருகநலம் அனுதினமும் நமதுமனம் இயைவொளிரப்
பெருமகள் வருக வருக,
பெருமையென வருவனகள் பெருகவரு பெருமாட்டிப்
பெண்ணொளீ வருக நீயே. 18

வெண்பா

நீயிங்கு நெஞ்சத்து மாசகற்றி நேர்மையன்
ஆயினையேல் அஃதே அறமாகி - வாயுரைக்கும்
சொல்லோடு செய்கைநலம் தோற்றுவிக்கும் இம்முறையின்
அல்லாத மேற்பூச்சே ஆம்.
19

கட்டளைக்கலித்துறை

ஆமென்பான், மாற்றுவான், யாரினும் இங்கே அறிவுடையேம்

யாமென்பான், தேரான் அதைநாமும் சுட்டி அறிவுறுத்தப்

போமென்பான், பின்வந்து பொல்லாங்கு செய்வான், புகழ்ந்திடிலோ

நாமென்றும் ஒன்றென்பான், நச்சுநோய் போல்வான்போம் நாள்வரையே! 20

விருத்தம்

ஐயேஇவன் என்கண்மணி நீங்காதுறை போதும்
அங்கேயிமை மூடும்கணம் அதனாற்துய ரேதும்
எய்தானதை நீங்கானெனும் இத்தன்மையி னாலே
என்றும்இமை விழியாநிலை ஆனேனடி. மாலே
பெய்தேகரு மையால்விழி தீட்டாமலும் போனேன்
பிரிவென்பதொர் துயர்வாட்டினும் நீர்சொட்டிலளானேன்
நொய்தாத்தினம் உளம்தின்றிடும் கலைகற்றஎன் வல்லா!
நூறாயிரம் முறைசொல்லுவன் விடுவேனொடா கள்ளா. 21

வெண்பா

கள்ளாமை என்னும் கடமை துறவியர்க்கும்
உள்ளதெனும் உண்மை உரைத்திட்ட - வள்ளுவர்
இல்லறத்தில் இல்லாத ஏற்றம் துறவறத்தில்
இல்லையெனச் சுட்டுவர்காண் ஈங்கு

--------

கட்டளைக் கலித்துறை

ஈங்கென் தலைவன் , எனது நிறுவனம் என்றுமனம்
தாங்கிப் புகழ்ந்து, தருக்கிடும் ஊழியர் தாமுளரேல்
ஓங்கும் உயர்வும், உலைவிலா ஊக்கமும் ஒத்துழைப்பும்
நீங்காப் பொருளும் நிறையும், வளரும் நிறுவனமே! 23

விருத்தம்

வனமே முகிழ்த்த முகையாய் மணத்தை
வடிவாய்ச் செழித்த இதழாலே
தினமே பதுக்கி மதுவால் நிரப்பி
சிறிதாய் மலர்த்தும் அதுபோலே
மனமே கிளைத்து இதழே தெறித்த
வடிவாய்த் திறப்பின் இழையாலே
எனையே தொடுத்த முடிவாய்த் துளிர்க்கும்
இவள்வாய் மலர்த்தும் நகையாமே. 24

வெண்பா

நகைமுகம் காட்டி,வரும் நல்விருந் தோம்பித்
தகைமைசால் இல்லறம் தாங்கும் - வகையறிந்து
சீராட்ட மக்களெனும் செல்வமொடு யாவரும்
பாராட்ட வாழ்தலே பண்பு
25

கட்டளைக் கலித்துறை

பண்புடை யார் நற் பரிசுடை யார்தம் பகையிடமும்

நண்புடை யார் உள் நயமுடை யார்சொல் நலமுடையார்

கண்படும் யாவும் கனிவுடன் நோக்கும் கருத்துடையார்

செண்டு புடைத்திடும் வெற்றிகள் சேர்ந்திடச் செய்பவரே! 26

விருத்தம்

செய்பவ னுக்கே சொல்லுதல் ஆற்றேன் என்கை ஓயாமல்
எய்பவ னுக்கோ இலக்கென நின்றேன் அந்தோ என்றேனும்
உய்பவ ளோநான் ஒளிக்கவும் மாட்டா உள்ள நொய்மையினாள்
கொய்பவன் உயிரைக் குடைபவன், தன்னை என்னுள் கொண்டவனே.27

வெண்பா

கொண்டிடுவோம் வாழ்வின் குறிக்கோளாய் வள்ளுவன்தான்
கண்ட அறம்பொருள் காமநெறி - பண்டுதமிழ்
தந்த தவப்புதல்வன் தாள்பணிந்து சூளுரைப்போம்
இந்தவழி செல்வோம் என. 28

கட்டளைக் கலித்துறை

எனதாற்றல் போலே எவர்க்குண் டெனவே எகிறிடுவார்
தனதாற்றல் அற்றுச் சரிவார், பொருள்வளம் சார்ந்திடினும்
நினைவாற்றல் கொண்டு நிறைந்த பணிவும் நெறிமுறையும்
இனிதாற்றல் பெற்றார்க் கெதிர்ப்படும் யாவும் இனிமைகளே! 29

விருத்தம்

இனிதிவள் வெப்பம் இனிதிவள் தட்பம் இனிதிவள் நுட்பம் கலவியிலே
இனிதிவள் கண்கள் இனிதிவள் பண்கள் இனிதிவள் நண்ணல் அருகினிலே
இனிதிவள் தோள்கள் இணைவிழி வேல்கள் ஏற்றிடும் நெஞ்சோ இனிமையிலே
நனைகையில் நானேன் நாடிடல் வேண்டும் நாரணன் ஆளும் உலகதுவே. 30

நூற்பயன்

மூவர் இயற்றிய மும்மணி மாலையை
ஆவ லுடனே அகங்கொள்வார் -மேவுநலம்
எண்ணகத்தே கொண்டிடுவார், எண்ணிரண்டும் பெற்றிடுவார்
மண்ணகத்தே வாழ்வார் மகிழ்ந்து.